லேவ் தல்ஸ்த்தோய்

# சிங்கமும் நாயும்



# சிங்கமும் நாயும்

லண்டன் மாநகரில் காட்டு மிருகங்களின் காட்சி நடந்தது. மிருகங்களைப் பார்ப்பதற்குப் பணமோ அல்லது நாய்களும் பூனைகளுமோ கட்டணமாக வசூலிக்கப் பட்டன. நாய்களும் பூனைகளும் விலங்குகளுக்கு இரையாகப் போடப்பட்டன.

ஒரு மனிதனுக்கு மிருகங்களைப் பார்க்க ஆசை உண்டாயிற்று. தெருவில் ஒரு நாய்க்குட்டியைப் பிடித்து மிருகக் காட்சிச்சாலைக்கு அதைக் கொண்டு வந்தான். பார்ப்பதற்கு அனுமதிக்கப்பட்டான். நாய் சிங்கத்துக்கு உணவாக அதன் கூண்டுக்கு உள்ளே போடப்பட்டது.

நாய் வாலை இடுக்கிக்கொண்டு கூண்டின் மூலையில் போய் ஒடுங்கியது. சிங்கம் அதை நெருங்கி மோந்து பார்த்தது.

நாய் மல்லாக்க விழுந்து, கால்களை உயர்த்திக்கொண்டு வாலை ஆட்டத் தொடங்கியது.

சிங்கம் அதைத் தன் முன்காலால் லேசாகத் தொட்டுத் திருப்பிற்று.

நாய் துள்ளிக் குதித்து, சிங்கத்தின் எதிரே பின்கால்களில் நின்றது.

சிங்கம் நாயை நோக்கிற்று. தலையை இப்புறமும் அப்புறமும் திருப்பிற்று. ஆனால் நாயைத் தொடவில்லை.

சொந்தக்காரன் சிங்கத்துக்கு இறைச்சி கொடுத்தான். சிங்கம் அதில் ஒரு துண்டு பிய்த்து நாய்க்கு வைத்தது.

சாயங்காலம் சிங்கம் உறங்குவதற்காகப் படுத்ததும் நாய் அதன் பக்கத்தில் படுத்து, அதன் கால்மேல் தன் தலையை வைத்துக்கொண்டது.

அப்போதுமுதல் நாய் சிங்கத்துடன் ஒரே கூண்டில் வாழ்ந்துவந்தது, சிங்கம் அதைத் தீண்டவில்லை. அதனுடன் சேர்ந்தே இரை தின்றது, உறங்கிற்று. சில வேளைகளில் அதோடு விளையாடவும் செய்தது.



ஒரு நாள் மிருகக் காட்சிச்சாலையைப் பார்க்க வந்த ஒரு கனவான் தன்னுடைய நாயை அடையாளம் கண்டுகொண்டார். அது தனது சொந்த நாய் என்று சொல்லி அதைத் தனக்குத் தந்துவிடும்படி காட்சிச்சாலையின் சொந்தக்காரனிடம் கேட்டார். சொந்தக்காரன் நாயைக் கொடுத்துவிட விரும்பினான். ஆனால் அவர்கள் நாயைக் கூண்டிலிருந்து வெளியே எடுப்பதற்காகக் கூப்பிடத் தொடங்கினார்களோ இல்லையோ சிங்கம் பிடரியைச் சிலிர்த்துக்கொண்டு கர்ஜித்தது.

இந்த மாதிரி ஒரு வருஷம் பூராவும் சிங்கமும் நாயும் ஒரே கூண்டில் சேர்ந்து வாழ்ந்தன.



ஓர் ஆண்டுக்குப் பிறகு நாய் நோய்ப்பட்டு இறந்து போயிற்று. சிங்கம் ஊண் கொள்வதை நிறுத்திவிட்டது. எப்போது பார்த்தாலும் நாயை முகர்வதும் நக்குவதும் பாதத்தால் தொடுவதுமாக இருந்தது.

நாய் செத்துவிட்டது என்று புரிந்துகொண்டதும் சிங்கம் துள்ளிக் குதித்தது, பிடரியைச் சிலிர்த்தது, வாலைச் சுழற்றி இரு விலாக்களிலும் சொடேரென்று அடித்துக்கொண்டது, கூண்டின் சுவர்மேல் பாய்ந்து கம்பிகளையும் தரையையும் கறுவத் தொடங்கிற்று.

நாள் முழுதும் அது அடித்து மோதிற்று, கூண்டுக்குள் ஓடிச் சாடிற்று, கர்ஜித்தது. பிறகு இறந்த நாயின் பக்கத்தில் படுத்து அமைதி அடைந்தது. சொந்தக்காரன் செத்த நாயை அகற்ற விரும்பினான். ஆனால் சிங்கம் ஒருவரையும் அதை அண்ட விடவில்லை.

வேறு ஒரு நாயைக் கொடுத்துவிட்டால் சிங்கம் தன் துயரத்தை மறந்து விடும் என்று நினைத்து, சொந்தக்காரன் உயிருள்ள நாய் ஒன்றை அதன் கூட்டுக்கு உள்ளே விட்டான். சிங்கமோ அக்கணமே அதைத் துண்டு துண்டாகப் பிய்த்து எறிந்துவிட்டது. அப்புறம் அது தன் கால்களால் இறந்த நாயைத் தழுவிக்கொண்டு ஐந்து நாட்கள் அப்படியே கிடந்தது.

ஆறாவது நாள் சிங்கம் இறந்து போய்விட்டது.



# கழுகு

ஒரு கழுகு, கடலிலிருந்து வெகு தூரத்தில், பெரிய சாலை ஓரமாக மரத்தின் மேல் கூடு கட்டி, குஞ்சுகளை வளர்த்து வந்தது.

ஒரு நாள் மரத்தின் அடியில் மனிதர்கள் வேலை செய்துகொண்டிருந்தனர். அப்போது கழுகு ஒரு பெரிய மீனை விரல்களால் பற்றிக்கொண்டு கூட்டுக்குப் பறந்து வந்தது. ஜனங்கள் மீனைப் பார்த்துவிட்டார்கள். அவர்கள் மரத்தைச் சூழ்ந்துகொண்டு கத்திக் கூச்சலிடவும் கழுகின்மேல் கற்களை எறியவும் தொடங்கினார்கள்.

கழுகு மீனை நழுவ விட்டுவிட்டது. மனிதர்கள் அதை எடுத்துக்கொண்டு போய் விட்டார்கள்.



கழுகு கூட்டின் விளிம்பில் உட்கார்ந்தது. குஞ்சுகளோ, தலைகளை நிமிர்த்திக் கீச்சிட ஆரம்பித்தன. தீனி வேண்டும் என்று கேட்டன.

கழுகு களைத்துப் போயிருந்தது. கடலுக்கு மறுபடி பறந்து போக அதற்கு முடியவில்லை. அது கூட்டுக்கு உள்ளே இறங்கி, சிறகுகளால் குஞ்சுகளை அரவணைத்துக்கொண்டு சீராட்டிற்று, அவற்றின் பஞ்சு இறகுகளைக் கோதிற்று. கொஞ்ச நேரம் பொறுத்துக்



கொள்ளுங்கள் என்று அவற்றைக் கேட்டுக்கொள்வது போலப் பாவனை செய்தது. ஆனால் அது சீராட்டச் சீராட்ட, குஞ்சுகள் இன்னும் உரக்கக் கீச்சிட்டன.

அப்போது கழுகு அவற்றை விட்டு அப்பால் பறந்து மரத்தின் உச்சிக் கிளையில் உட்கார்ந்தது.

குஞ்சுகள் இன்னமும் அதிகமாக முறையிட்டுச் சீழ்க்கை அடித்தன, கீச்சிட்டன.

அப்பொழுது கழுகு திடீரென்று தானே இரைந்து கத்திவிட்டு, சிறகுகளை விரித்து, சிரமத்துடன் கடலுக்குப் பறந்து போயிற்று.

பொழுது சாய்ந்த பிறகே அது திரும்பிற்று. சத்தமில்லாமல் தரைக்கு உயரே தாழப் பறந்தது. அதன் விரல்களில் மறுபடியும் ஒரு பெரிய மீன் இருந்தது.

மரத்தை நெருங்கியதும் அக்கம் பக்கத்தில் இப்போதும் ஆட்கள் இருக்கிறார்களா என்று நோட்டமிட்டுவிட்டு, சட்டென்று சிறகுகளை ஒடுக்கிக் கொண்டு கூட்டின் விளிம்பில் உட்கார்ந்தது.

குஞ்சுகள் தலைகளை நிமிர்த்தி, வாய்களை அகலத் திறந்தன. கழுகு மீனைப் பிய்த்துக் குஞ்சுகளுக்கு ஊட்டிற்று.



